

உ

சிவமயம்.

ஸ்ரீமுருகன் றுணை

கரிவலம்வந்த நல்லூராகிய

தென்கருவை

# திருக்களாவீசருக்கு

மேற்படி திருப்பணி செய்யும்

ஸ்ரீமாந் மாநகரி

லே. அரு. அருணசலச்செட்டியாரவர்கள்

## வெள்ளி

# நாகாபரணம்

குவளை சார்த்தின வைபவத்தன்று

பாடிய

## பாசுரங்கள்.

Jegam & Co., Trichinopoly.






சிவமயம்
முருகன் றுணை.

# திருக்களாவீசருக்கு வெள்ளி நாகாபரணக் குவளை சார்த்தின வைபவத்தன்று பாடிய பாசுரங்கள்.

---

இஃதியற்றினர்
கல்லல் ஸ்ரீலஸ்ரீ
மணிவாசக சரணாலய சுவாமிகள்



அறுசீரடியாசிரியவிருத்தம்.

பொன்பூத்த கலையழகன் பூப்பூத்த
மனையழகன் புயங்க மீதி
லின்பூத்த துயிலழகன் எழிற்பூவை
நிறத்தழக னினிதாய்த் தந்த
கொன்பூத்த நிலையழகன் குலம்பூத்த
தலையழகன் குலவெண் கஞ்ச
மின்பூத்த நாவழகன் விரிஞ்சன
ருள்படிமீதில் விளங்கி மேலாய் 1

புன்கருவை யடியார்க ளடையாமற்
புரந்தருளிப் புவனத் துள்ளோர்
நன்கருவை யகமீதின் மேலான
வாழ்வடையும் நலத்தை யீந்த
தென்கருவைக் களவுடையா னிடந்திகழ்ந்து
வளர்ந்தோங்குந் தெய்வப் பாவை
மன்கருவை வேல்விழியொப் பனைமாது
திருமேனி வடிவம் பொங்க 2

தவநலம்பெற் றெழிலோங்கி மற்றோரின்
மிக்காளாய்த் தழைத்து வாழும்
சிவநலம்பெற் றவளான சிவனம்மாள்
நிறையங்கி சிறக்கச் சார்த்திப்
பவநலம்பெற் றின்புற்று ளப்பரிசு
தனையுணர்ந்த பரம ஞானி
நவநலம்பற் பலவியற்றுந் தவமுனியெங்
குருநாத னளிர்பொற் றாளான் 3

குன்றைநகர் மேலமடத் ததிபதி
நங்கணபதிப் பேர்க்குரிசி லேக்கிக்
கொன்றையணி சடையிறை பெங்கோமாற்
நிறையங்கி குலவ லென்றே [கும்

30-5

மன்றையுடை யவனது திருவுளத்தின்
கருத்தெதுவோ மலருஞ் சோதி
யென்றையினைக் கண்ணுறுவே னெனமனத்தி
னினைத்தநவே யெழிலுற் ரோங்கி 4

மணியொளிசெய் மகுடமன்னர் வழிவழூதி
வரதுங்கர் மகிழ்ந் தன்பாக
வணிதிகழப் பத்திமையாய்த் திருக்களா
வுடையபிரா னமருங் கோயிற்
பணிபுரிந்து முற்றுரு வணமிருந்த
திருப்பணிகள் பலவும் பூர்த்தி
யெணியியற்ற வெனவுதித்தோன் தவச்சீலன்
வணிகர் குலத்தேந்த லானோன் 5

கோநகரி சிவராஜ தானியெனு
மதுரைநகர் குலவும் பாண்டி
மாநகரின் சார்பான மாநகரி
தனில்வசிக்கும் வள்ளன் மன்றற்
றேனுகருந் தேனெழுகு மலர்மாலை
யணிமார்பன் தமிழ்த்தீந் தேனைத்
தானுகரும் பேரறிவோன் கரைகண்ட
கற்புடையோன் றகைமை மிக்கோன் 6

பொங்கியுறுஞ் சிவவேடத் திருநீற்றுப்
பொலிவுடையோன் புலவர் தம்பாற்
றங்கியுறு பேரன்பன் சற்சனர்க
ணேயமதைத் தழுவுஞ் சீலன்
இங்கிதமா மதுரமொழி வாசகத்தாற்
றுட்டரையு மிணக்கஞ் செய்யுஞ்
சங்கிதத்திற் கனபிரியன் சைவநெறித்
துறையொழுகுஞ் சாந்தமுள் ளோன் 7

இளமதியந் தனைச்சூடும் பரமேசர்
திருவடியி னிறுத்துஞ் சிந்தை
வளமுடையா னிலக்குமணப் பெரியோனு
மிலக்குமிப் பேர்மங்கை யாரும்
உளமகிழப் பெற்றெடுத்த வறத்துறையோ
னுலப்பில்லா துயருஞ் செல்வன்
பளககன்ற பெருந்தனத்தான் பார்புகழும்
பெருந்தனத்தான் படியின் மேலோன் 8

மேலான மதியூகி சோமசுந்தரச்
சேயை வேண்டிப் பெற்றேன்
நூலான தெதையுமுணர் விற்பனவா
னடியவரைப் போற்றுஞ் சீர்த்திப்

பாலான மெய்யன்பன் மாலருணா
சலப்பெயரோன் பணிந்தெங் கோவாஞ்
சாலானனக் கனிவோன் சாற்றுமொழி
தனைக்கேட்டுத் தழைத்தா னாகி 9

ஏற்றமிகு புறப்பணிகள் பலவியற்று
வதற்கேற்ப விறைவ னார்க்கே
யாற்றலுட னகப்பணியுஞ் செய்வலென
மனங்கனிந்தே யழகாய் முன்னாள்
நோற்றபலன் பெறுவானா காபூரணம்
நிறையங்கி நுவலச் செய்தே
யேற்றமுறப் புனைந்துபெரும்பேறடைந்தான்
வாழியவ னென்று மகிழ்ந்தார் 10

முற்றும் சுபம்.

குரோதன௵ சித்திரை௴ உஉ





இதுவுமது.

இஃதியற்றினோர்

சேற்றூர் சமஸ்தான வித்துவான்

மகா-ள-ள-ஸ்ரீ

பா. அப்பாவுக் கவிராயர் அவர்கள்



வெண்பா.

உருவையடி யார்க்கல்லா லும்பருக்குங் [காட்டாக்
கருவைநக ரீசன் கனியக்—குருவையுறும்
நாகாபரணம் நனிபுனைந்தான் மா நகரி
வாகனருணை சலப்பேர் மன்.

முற்றும் சுபம்






இதுவுமது.

இஃதியற்றினார்

பழங்கோட்டை உபாத்தியாயர்

மகா-ள-ள-ஸ்ரீ

லே. பூவநாதய்யர் அவர்கள்



பஃறொடை வெண்பா.

திருக்கருவை நாதன்
சேவடி தேர்வார்க்குத்
திருக்கலச் செய்தருளுந்
தேவன்—திருக்கொருமூன்
றுனவர்க்கோர் வெள்ளியர
வாபரணம் நன்கணிந்தான்
மாநகரி வாழுமுயர்
வள்ளலாம்—வானநிலம்
போற்றிப் புகழுமெங்கள்
பொற்கள வீசன்கோயிற்
கேற்ற திருப்பணிக
ளேர்பெறவே—ஆற்றுவதில்

ஊக்கமிக வுடையா
னொப்பில்குணங் கற்புநிறை
யாக்கமிகு மனையாளுண்
மையருள்—வாக்குநலம்
வாய்ந்தமகப் பேறுடையான்
வண்டமிழி னெண்கலைக
ளாய்ந்து தெளிந்த அறி
வுடையான்—ஏய்ந்த
கருணாகர னறங்கள்
காத்திடு சற்சீலன்
அருணா சலக் குரிசிலாம்.

முற்றும் சுபம்

முருகன் றுணை

குரோதனஹ சித்திரைமீ உஉவ